கட்டு தாண்டியாய்விட்டது. மற்றொரு கட்டுக்குட்புகுவதற்காக எங்கே கன்னம் வைக்கலாம் என்று தேடி கடைசியாய் நித்தியம் ஜலம் பட்டுப்பட்டுக் கசிந்தும் உப்பு பூத்தும் எலி வளையுடனுங்கூடி யிருக்கும் ஒரு இடத்தைக் கண்டுபிடித்தான். அந்த இடத்தில் கன்னம் வைத்து உட்புகுந்தால் ஸ்திரீகள் முகத்தில் விழிக்கக் கூடாது. ஏனெனில் கள்ளர்கள் ஒரு வீட்டிற்குள் சென்றவுடன் பெண்கள் முகத்தில் விழிப்பார்களேயானால் அன்றையயிரவு அவர்கள் அகத்தியம் பிடிக்கப்பட்டு தண்டிக்கப்படுவார்கள் என்பது ஸ்கந்தபுத்திரர்களுடைய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

கன்னம் வைக்க இடத்தை நிச்சயப்படுத்திய பிறகு என்னவிதமாய்க் கன்னமிடுகிறது என்பதை சர்விலகன் யோசிக்கலானான். இவன் இதுவரையில் கன்னமிட்ட இடங்களில் மறுநாள் கொள்ளை போனதை வந்து விசாரிக்கும் ஜனங்களில் சிலர் ஐயோ பாவி எல்லாவற்றையும் கொண்டுபோய் விட்டானே என்று சொல்லுவார்களாம். மற்றும் சிலர் என்ன அழகாய்த் தாமரை மொட்டு போலவும் சூரியன்போலும் பால சந்திரன்போலும் பூரண கும்பம்போலும் விசித்திர விசித்திரமாய்க் கன்னம் வைத்திருக்கிறான்! இந்த வித்தையில் கூடத் தேர்ச்சியா என்பார்களாம். கன்னமிடும் விதியோ நான்குவிதம். சுட்ட செங்கல்களாயிருந்தால் ஒவ்வொன்றாக ஓசைப்படாமல் இழுத்தெறிந்து பூர்ண கும்பம்போல இடவேண்டும். பச்சை செங்கற் சுவராகவிருந்தால் கிண்டி எடுத்து பாலசந்திரன் போலும் சூரிய பிம்பம்போலு மிடவேண்டும். சாதாரண மண்

சுவராக விருப்பின் ஜலம் விட்டு, நனைத்து சுரண்டி சுரண்டி கன்னம் வைக்கவேண்டும். மரத்தாலாவது அல்லது காரையாலாவதிருப்பின் உளியைக்கொண்டு தறித்துத் தறித்து கன்னமிடும்படி விதி. சாருதத்தன் வீடோ சுட்ட செங்கற்களால் கட்டப்பட்டிருந்தது. அவைகளை அசக்கி இழுத்து கன்னவாசற்பண்ண சர்பிலகன் எத்தனித்தான். காரியமாரம்பத்திற்கு முந்தி தனது இடுப்பிலிருந்து யோக மைச்சிமிழ் ஒன்றை எடுத்து அதிலிருந்து கொஞ்சம் மையைத் தனது கண்ணில் இட்டுக்கொண்டான். இந்த மையை ஒருவன் இட்டுக்கொள்வானேயானால் அவன் மற்றவர்கள் கண்களுக்குத் தெரியவேமாட்டான். அவன் பேரில் ஆயுதங்கள் விழுந்தாலும் உபத்திரவம் பண்ணமாட்டாதாம். இப்படியாய் மையையிட்டுக்கொண்டு பிறகு கன்னமிட சர்பிலகன் ஆரம்பிக்கையில் சுவரை அளப்பதற்கு வேண்டிய கயிறு கொண்டுவர மறந்துவிட்டதைப் பார்த்துக் கொஞ்சம் பயங்கி நமக்குப் பூணூல் இருக்கிறவரையில் கயிறுக்கு என்ன குறைச்சல், நம்மைப் போலொத்தவர்களுக்குப் பூணூல் மிகவும் பிரயோஜனமுள்ள திரவியம். கன்னவாசல் அளந்து கன்னம் வைக்கவும், நகைகளை இழுத்துக் கழற்றவும், பாம்பு பல்லி கடித்தால் விஷம் ஏறுதபடி கட்டவும் வெகு உபயோகம் என்று சொல்லித் தனது பூணூலைக் கழற்றி கன்னவாசலுக்காகச் சுவரை யளந்து கன்னம் வைத்தான். உள்ளே விளக்கு நன்றாக எரிந்துகொண்டிருந்தது. சர்பிலகன் நின்றவிடம் வெளிப்பக்கம் இருட்டாக இருந்தது. கும்மிருட்டாயிருந்த அந்த இடத்தில்

கன்னவாசல் வழியாய் நிபகார்தி விழவே அது உரை கல்லில் பத்தரை மாத்துத் தங்கத்தை உரைத்தால் எப் படி யிருக்குமோ அப்படிச் சோபித்தது. இப்படியாய் கன்னவாசலைத் தோண்டி முதலில் தான் புகுந்தால் யாரா வது பிடித்துக்கொள்வார்களோ என்னமோ என்று யோசித்துத் தன்னைப்போலச் செய்து வைத்திருந்த பொம்மையை கன்னவாசலின் உள்ளே விட்டுப்பார்த் தான். ஒருவரும் போய் ஆளைப்பிடிக்கவில்லை. உடனே ஒருவருமில்லை உள்ளே என்று நிச்சயித்து சர்பிலகன் உட்புகுந்தான். ஜனங்கள் விழித்துக் கொண்டால் உடனே ஓட வீட்டுக் கதவைத் திறந்து வைத் தான். பழைய கதவானதால் கிரீச் என்று கத்த ஆரம்பித்தது. உடனே கீலில் கொஞ்சம் சலத்தைவிட்டு ஓசைப்படாமல் திறந்தான். உள்ளே சாருதத்தனும், மைத்திரேயனும் தூங்கக்கண்டு நிசமாகத் தூங்குகிறார் களா இவர்கள் அல்லது பொய்யா பார்ப்போமென்று “ ஞாவு ” என்று பூனைமாதிரி கத்தினான். ஒருவரும் எழுந்திருக்கவில்லை. கண்கள் நன்றாய் மூடி விழி புரளாம லிருப்பதையும், நன்றாகக் குறட்டை விட்டுக் கைபோன விடம் கால்போனவிடம் தெரியாம லிவர்கள் தூங்குவதை யும் கண்டு, நல்ல சமயத்தில் வந்தோம், இவர்கள் வீட் டைக் கொள்ளை யடிக்க என்று சர்பிலகன் மனங்களித் தான். ஆனாலவனுக்கு அங்கு என்ன இருந்தது. எங்கு பார்த்தாலும் வீணையும், தம்பூரும், கிழிந்த புஸ்தகங்களு மிருந்தனவேயன்றி ஒரு சின்னக் காசுகூட காணோம். இதென்ன ஆச்சரியம் வீடு இவ்வளவு பெரிதாகமாத்திர மிருக்கிறது ஒரு காசுகூட இந்த வீட்டிலில்லாம லிருக்

குமா ? இந்த வீட்டு யஜமான் ராஜாவுக்குப் பயந்து பணத்தைப் புதைத்து வைத்திருக்கிறார்போலக் காண்கிறது. நல்லது இருக்கட்டும்; நம்மிடம் நமது ஆச்சாரியர் கொடுத்த விரையிருக்கிறது. அதை எடுத்து விசிறினால் புதையல் எங்கிருக்கிறதோ அங்குபோய் நிற்கும் என்று யோசித்து அப்படியே செய்தும் பார்த்தான். நிசமாக புதையில் இருந்தாலல்லவோ, அவ்விரைகள் புதையலிருக்குமிடத்தில் நிற்கும். புதையலோ கிடையாது. ஏனப்பா இன்றைய தினம் வீட்டைக் கண்டு நாம் மோசம் போனோம் என்று இவன் யோசித்துக்கொண்டிருக்கையிலேயே மைத்திரேயன் ஏதோ கனவுகண்டு "அப்பா சாருதத்தா நீயே வைத்துக்கொள் இந்த நகைகளை நீ வாங்கிக்கொள் எனக்குப் பயமாயிருக்கிறது" என்று உளறினன். இப்படி இவன் பிதற்றினதின்பேரில் தான் சர்பிலகனுக்கு இவன் கையில் நகை முடிச்சு இருக்கிறது என்பது தெரிந்தது. உடனே முதலில் விளக்கை யணைத்துவிட்டு மைத்திரேயன் கையிலிருந்த முடிச்சை எடுத்துக்கொண்டு சர்பிலகன் என்ற திருடனும் வீட்டுக்காரனை நிந்திக்காமல் புறப்பட்டுப் போனன். சாருதத்தன் வீட்டில் ரதனிகை என்ற ஒரு வேலைக்காரி யிருந்ததாக முன்னமே சொல்லியிருக்கிறோமே. அவள் திருட்டுப் போன மறுநாள்காலமே வீடு கூட்டுவதற்கு எழுந்திருந்த பொழுது வாசற்கதவு கொல்லைக்கதவு தனக்கு முந்தியே திறந்திருக்கவும் கன்னமிட்டிருக்கவுங்கண்டு சாருதத்தனையும் மைத்திரேயனையும் எழுப்பிக் காட்டினள். சாருதத்தன் நாம் ஏழையாய்விட்ட சமாசாரம் ஊரெல்லாந் தெரிந்திருக்க நமது வீட்டில் யார் கன்னமிட்டிருப்பார்

னன். யாராவது புதிதாகக் கன்னமிடக் கற்றுக்கொள்ளு கிறவனுவது அல்லது நமது நிசமதிப்புத் தெரியாத அயலூராளுவது இட்டிருக்கவேண்டும் என்றான். பிறகு அந்த கன்ன வாசலின் அழகைப்பற்றி மெச்சி "ஐயோ பாவம், இவ்வளவு சிரமப்பட்டு கன்னமிட்ட வன் கை வலியோடே தானே திரும்பிப் போயிருப்பான். இவ்வளவு சிரமப்பட்டு இந்த அற்பன் வீட்டில் ஏன் கன்னமிட்டோம் என்று நம்மை நிந்தித்துக்கொண்டு தானே போயிருப்பான்" என்று யோசிக்கையில் வசந்த சேனை ஆபரணங்கள் நினைவு மைத்திரேயனுக்கு வரவே அதைத் தேடுகையில் அந்த முடிப்பு திருட்டுப்போய் விட்டதாகத் தெரிந்தது. நகைகளை அவன் கொண்டு போய்விட்டானே என்று மைத்திரேயன் சொல்ல அதற்கு சாருதத்தன் சந்தோஷம்; பட்ட சிரமத்திற்கு அவனுக் குக் கொஞ்சமாவது கிடைத்ததே என்று களித்தான். மைத்திரேயன் திருட்டுப்போன நகைகள் வசந்தசேனை ஒப்பிவைத்த நகைகள் என்று சொல்லவே சாருதத்தன் மூர்ச்சை யடைந்தான். கிட்ட இருந்தவர்களின் சகாயத் தால் மூர்ச்சை தெளிந்தெழுந்து ஐயோ நமது வீட்டில் திருடன் வந்து வசந்தசேனை நகையைக் கொண்டு போனான் என்றால் யார் நம்புவார்கள். நாமே பசி பொறுக்கமாட்டாமல் நகைகளை விலையாக்கிவிட்டுப் பொய் சொல்வதாக ஜனங்கள் சொல்லுவார்களே என்று சாரு தத்தன் விசனப்படுகையில் மைத்திரேயன் அவனைச் சாந் தப்படுத்தினான்.

இப்படித் தங்கள் வீட்டில் கன்னமிட்டு திருடன் வசந்தசேனை நகையைக் கொண்டு போய்விட்டான் என்

பது சாருதத்தன் மனைவியாகிய தூதிகைக்குத் தெரிந்தது. இவள் மூர்ச்சையடைந்தெழுந்து தன்னிடம் பாக்கியிருந்த ஒரு ரத்னுவளியைக் கழற்றி இதை எப்படியாவது கெட்டுப்போன நகைக்காக வசந்தசேனை வீட்டிற்கு அனுப்பவேண்டு மென்று யோசித்து மைத்திரேயனுக்குச் சொல்லி அனுப்பினாள். அவன் வந்ததும் அவனைக் கிழக்கு முகமாய் உட்காரச்சொல்லி தான் மகேசுவர விரதம் செய்து வந்ததாகவும் அவ்விரதம் அன்றுமுடிந்தபடியால் ஒரு பிராமணனுக்கு தான் ஏதாவது தானம் பண்ண வேண்டுமென்று யோசித்து தனது ரத்னுவளியைக் கழற்றி அவனுக்குத் தானம் செய்வதாகவும் சொல்லி அந்த மாலையை அவனிடம் கொடுத்தாள். அவள் கருத்துமைத்திரேயன் நம்மிடத்தில் இந்தநகையை வாங்கி நமது புருஷனைத் தவிர வேறுயாரிடம் கொடுக்கப்போகிறான் ஆகையால் இந்த நகையை நமது நாதனவனிடமிருந்து பெற்றுக்கொண்டு வசந்தசேனை வீட்டுக்கு அனுப்பி விடுவார். நாமாக நேரே கொடுத்தால் வாங்கிக் கொள்ளமாட்டார் என்று யோசித்து இவனுக்கு ரத்னுவளியைத் தானம் பண்ணினாள். இவனும் அந்த நகை தனக்குத் தானம் பண்ணப்பட்ட கருத்தை யறிந்து சாருதத்தனிடம் அதைக் கொண்டுவந்து கொடுத்து நன் மனைவியை யடைந்த பலனிது என்றான். சாருதத்தன் நமது பெண்சாதி கூட நம்முடைய எளிமைத்தனத்திற்கு மனதிரங்கும்படி வந்ததே நாம் என்ன ஆண்பிள்ளை. தன் கைப்பொருளை எல்லாமிழந்து பெண் சாதி பணத்தால் எவன் பிழைக்கிறானே அவன் புருஷனு யிருப்பினும் ஸ்திரீகளுக்கு ஒப்பாவான். அவன்

பெண்சாதி பெண்ணாயிருப்பினும் புருஷனுக்கு ஒப்பாவாள் என்று துக்கப்பட்டு பிறகு தனது சுகதுக்கங்களை யறிந்து நடக்கும் பெண்சாதியும் காலத்துக்குத் தகுந்தபடி மாறாமல் எப்பொழுதும் உண்மையாயிருக்கும் மைத்திரேயனைப் போல ஒரு சிநேகிதனும் உண்மையைவிட்டு வழுவாமையும் தனக்கு இருக்கிற வரையில் தான் ஏழையல்ல பணக்காரனே என்று மனதைத் தேற்றிக்கொண்டான். பிறகு மைத்திரேயனிடம் நான்கு சமுத்திரத்திற சொப்பாயிருக்கும் ரத்னாவளியைக் கொடுத்து அதை வசந்தசேனையிடம் அவள் நகைகளுக்குப் பதிலாகக் கொடுத்து வரச்சொல்லி யனுப்பினான். மைத்திரேயனும் கொஞ்ச நாழிகைக் கெல்லாம் போவதாக ஒப்புக்கொண்டான்.

சர்வீலகன் மதனிகை என்ற தாசியை விலைக்கு வாங்குவதற்காக இப்படித் திருட ஆரம்பித்தான் என்ற சமாசாரம் முன்னமே நாம் சொல்லியிருக்கிறோமே; அந்த மதனிகை என்பவள் வசந்தசேனையிடம் இருந்த வேலைக்காரியிலொருத்தி. அவளை நாடிக்கொண்டு சாருதத்தன் வீட்டிலிருந்து திருடி வந்த நகையுடன் சர்விலகனன்று காலமே அங்கு வந்து சேர்ந்தான். அப்பொழுதுதான் வசந்தசேனையால் மதனிகை ஏதோ கொண்டுவா மாடியிலிருந்து கீழே யனுப்பப்பட்டு வாசலில் வந்திருந்தாள். அவளைக் கண்டதும் சர்விலகன் சந்தோஷமடைந்து இனியாவது உன்னை வசந்தசேனை மீட்பாளா என்றான். இதை மாடியிலிருந்தபடியே வசந்தசேனை கேட்டு தன் சம்பந்தங்கூட இருப்பதாகத் தோன்றினபடியால் அவன் சொல்லுகிறான் கேட்போம்

என்று இவர்கள் பேச்சை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

சாருதத்தன் வீட்டிலிருந்து திருடிவந்த நகைகளை சர்பிலகன் மதனிகைக்குக்காட்டி இந்த நகைகள் உன் கைக்கு அளவெடுத்து செய்திருப்பவைகள் போல் காண்கின்றன. இவைகளைப் பெற்றுக்கொண்டு வசந்தசேனை உன்னை விடுவாளா என்று சொல்லி அவளுக்குத் தான் திருடிவந்த முடிப்பைக் காண்பித்தான். அவள் அதைப் பார்த்துத் திகைத்து நான் முன்னமே பார்த்த நகைகள் போலிருக்கின்றன. எங்கிருந்து கொண்டுவந்தாய் என்று கேட்க சர்பிலகன் "காலமே ஜனங்கள் சொல்லிக் கொண்டதிலிருந்து சாருதத்தன் என்றொரு வியாபாரி வீட்டில் நான் கன்னம் வைத்துத் திருடினதாக அறிந்தேன்" என்றான். இவன் சொன்னதைக் கேட்டவுடன் மாடியின்மேல் வசந்தசேனையும், கீழே மதனிகையும் மூர்ச்சையாய் விழுந்தார்கள். உடனே சர்பிலகன் உபசாரம்பண்ணி மதனிகையை எழுந்திருக்கச் செய்தான். இதற்குள்ளே மாடியின்மேல் வசந்தசேனையும் மூர்ச்சை தெளிந்தெழுந்திருந்தாள். மதனிகையானவள் சர்பிலகனை நோக்கி "அடா பாவி, களவு செய்யும் நிமித்தமந்த சாருதத்தன் வீட்டில் யாரையாவது கொன்றாயோ" என்றாள். "இல்லை" என்று சர்பிலகன் சொல்லி இப்படித் தான் பட்டு வந்த சிரமத்திற்குத் தன்னைக் கொஞ்சமேனும் மெச்சாமல் சாருதத்தன் வீட்டில் ஒருவனையும் கொல்லாமல் வந்தாயா என்று அவனை க்ஷேமம் விசாரித்தாளென்று கன மனவருத்த முற்று வேசிகளை ஒரு நாளும் நம்பக்கூடாது அவர்

கள் மகா கெட்டவர்கள் என்று பின் வருமாறு நிந்தித்தான் :—

எக்காலத்திலும் எல்லாவற்றையும் கொடுக்கும் குல புத்திரர்கள் என்னும் நல்ல மரங்கள் வேசிகளென்ற கழுக்களால் கொத்தப்பட்டு நாசமடைந்து போகின்றன. வேசிகள் கொடிய நெருப்பு. அந்த நெருப்பானது காம விளையாட்டென்ற தீயை விட்டு எரிந்துகொண்டிருக்கும். இத்தீயில் ஐயோ மனிதர்கள் தங்கள் இளமையையும், பணத்தையும், கொட்டி எறிந்துவிடுகிறார்களே. ஸ்திரீகளிடத்திலும், ஸ்ரீ (ஸம்பத்து) களிடத்திலும் நம்பிக்கை வைக்கிறவன் முட்டாள். ஏனெனில் பாம்புக்குட்டிகள் போல் ஓரிடத்தில் நில்லாமல் இவ்விரண்டும் ஓடிக்கொண்டேயிருக்கும். ஸ்திரீகளிடம் பிரியமென்பதை வைக்கவே கூடாது, பிரியம் வைத்தவனை அவமானம்பண்ணி அவனிடமிருந்து அதிகமாகப் பறிப்பதே அவர்கள் தொழிலாக விருக்கிறது. வேசிகள் பணத்திற்காகச் சிரிப்பார்கள், கண்ணீரும் வடிப்பார்கள். புருஷர்கள் தங்கள் மேல் முற்றிலும் மோகித்து அன்புவைக்கச் செய்வார்கள். ஆனால் அவர்கள்மேல் அன்பு ஒருநாளும் வைக்கார்கள். ஆகையால் நல்ல குலத்தில் பிறந்த மனிதன் வேசிகள் என்னதான் அழகாயிருந்தாலும் சுடுகாட்டுப் பூவை எப்படி பூசைக்கு உபயோகிக்காமல் தள்ளுவானோ அப்படி அகற்றி வருவான். சமுத்திரத்தின் அலைகள்போல வேசிகள் குணம் அலைந்துகொண்டேயிருக்கும். அவர்கள் ராகமும் (பிரியமும்) சாயுங்கால மேகத்தினுடைய ராகம் (நிறம்) எப்படி உடனே மாறுமோ அதுபோல மாறிக்கொண்டேயிருக்கும்.

பணம் வரும் வரையில்தான் அவர்கள் அன்பு பாராட்டு வார்கள். பணங்களை எல்லாம் பிடுங்கிக்கொண்ட பிறகு, சாயம் பிழிந்த செம்பஞ்சை எப்படி ஜனங்கள் வீசி எறிந்து விடுவார்களோ அப்படி நாயகர்களை ஓட்டிவிடு வார்கள். அன்றியும் ஒரு நாயகனை மனதில் நினைத்துக் கொண்டே மற்றொருவனைக் கரங்களால் தழுவிக்கொள் வார்கள். ஒருவன் தன்னிடமிருக்க மற்றொருவனை மன திற்குள் நினைத்து நினைத்து ஸ்வப்னம் காணுவார்கள்; வேசிகள் எப்பொழுதும் கெட்டவர்களே. அது அவர் கள் உடன்பிறப்பு. மலையின் சிகரத்தில் கற்பாறையில் தாமரையை ஊன்றினால் அது வளருமா? கழுதையின் பேரில் குதிரைபாரம் போட்டால் அது அதை எடுக்குமா? அவரை போட்டால் துவரை முளைக்குமா? அதுபோல வேசியாய்ப் பிறந்த பிறகும் ஒருத்தி நல்லவளாக இருப் பாளா? என்று சர்விலகன் வாய்க்கு வந்தபடி வேசிகளைத் திட்டினான். அப்படிப் பிதற்றும் அவனைப் பார்த்து மதனிகை சாருதத்தன் குணங்களை வர்ணித்து அந்த மகானுக்கும் வசந்தசேனைக்குமிருக்கும் பிரியத்தையும் சொல்லி, "அந்த அன்பனிடம் என் யஜமானி ஒப்பி வைத்த நகைகளை நீர் திருடிவந்து அவைகளைக்கொண்டு என்னை மீட்கவந்தது உமக்கே நன்றாகத் தோன்றினால் சரி" என்றாள். இப்பொழுது தான் சர்விலகனுக்கு எல்லாம் தெரிந்துவிட்டது. நிழலுக்காக நான் வெயிலா லடிபட்டு எந்த மரத்தினடியில் போய்ச் சேர்ந்தேனோ அந்த மரத்தினுடைய கிளையையே நான் தெரியாமல் கழித்துவிட்டேனே என்ன செய்வேன் என்று தபித்தான். பிறகு "இப்பொழுது என்ன செய்யலாம் சொல்" என்று

மதனிகையைக் கேட்க அதற்கு அவள் "என்ன தோன்று கிறதோ அதைச் செய்யலாம் என்னைக் கேட்பானேன்" என்றாள். அதற்கு சர்விலகன் "நீ அப்படிச் சொல்லக் கூடாது. பெண்கள்தான் சுபாவத்திலேயே பண்டிதர்கள். புருஷர்களுடைய பாண்டித்திய மெல்லாம் புஸ்தகங் களால் உண்டாகிறது. பெண்களோ பிறப்பாலேயே புத்தி சாலிகள்" என்றான். இவைகளை எல்லாம் வசந்தசேனை யும் மாடியின் பேரில் நின்று கேட்டுக்கொண்டிருந்தாள்.

இவன் இப்படி தான் செய்தது குற்றமென்பதை யறிந்துகொண்ட பிறகு மதனிகையானவள் சர்விலகனைப் பார்த்து "நான் சொல்லுகிறபடி தாங்கள் செய்வீர்களேயானால் நம்மிருவருக்கும் நன்மையுண்டு. சாருதத்தன் தங்களிடம் நகைகளை யனுப்பினதாகச் சொல்லி இவைகளை வசந்தசேனையிடம் கொடுத்து விடும். அவள் அதை உண்மையாக நம்பி வாங்கிக் கொள்ளுவாள். அப்பொழுது நகைகள் சொந்தக்காரி யினிடம் சேரும். சாருதத்தரும் நல்லவராவார். மறு படி நீர் வேறெங்கேயாவது போய் என்னை மீட்கப் பணந் தேடி வாரும். கெட்ட வழியாய்ச் சம்பாதிக்காமல் நல்ல வழியாய்த்தேடி வரவேண்டும்" என்றாள்.

இவைகளை எல்லாம் கேட்டு சர்விலகன் ஆச்சரியப் பட்டு, இன்றுமுதல் உன்னால் எனக்கு நற்புத்தி வந்தது. நான்கு வேதங்களைக் கற்ற மகாப்பிராமணன் வமிசத்தில் சனித்த இதுவரையில் எனக்குப் புத்தி சொல்லுகிற வர்களில்லாமல் நான் கெட்டுப்போனேன். இன்று உன் னால் கரை ஏறினேன் என்று சந்தோஷப்பட்டு, அப்படியே அவள் சொன்னபடி [illegible]து ஒப்புக்கொண்டான்.

உடனே அவனை வெளியில் நிறுத்தி மதனிகை உட்சென்று தன் எஜமானியிடம் "சாருதத்தரிடமிருந்து ஒரு பிராமணன் தங்களைப் பார்க்க வந்திருக்கிறார்" என்றாள். அந்தப் பெருமாட்டிக்கு எல்லாந் தெரியுமாயினும் அவைகளைக் காட்டிக்கொள்ளாமல் "ஏன் தாமதம் அவரை அழைத்துவா" என்றாள். உடனே மனம் பதைப்பதைக்க சாருதத்தனிடமிருந்து வருகிறவன்போல, சாருதத்தன் வீட்டில் கன்னமிட்ட திருடனாகிய சர்பிலகனங்கு வந்து சேர்ந்தான். வசந்தசேனை அவனைக் கண்டதும் உபசரித்து சமாசாரம் விசாரித்தாள். நிசமாக அந்த மகாபுருஷனிடமிருந்து வந்தவன் போல் இத்திருடன் நகைகளை வசந்தசேனையிடம் கொடுக்கவே அவளதை வாங்கிக்கொண்டு சர்பிலகனைப் பார்த்துப் பின்வருமாறு சொன்னாள்:— "ஓய் பிராமணரே! நேற்று அந்த மகா புருஷர் என்னிடம் ஒரு சமாசாரம் சொல்லியிருந்தார். அது யாதெனில் 'இந்த நகையை யார் உன்னிடம் கொடுக்கிறானோ அவனுக்கு மதனிகையைக் கல்யாணம்செய்து கொடு' என்றபடி. ஆகையால் நீர் இன்று நகைகளுடன் வந்தபடியால் மதனிகையைக் கொள்ளும்" என்றாள். இதைக் கேட்டதும் சர்பிலகன் நடுங்கி "ஓகோ நாம் செய்த தவ்வளவும் இந்த அம்மணிக்குத் தெரிந்ததுபோலிருக்கிறது; நாம் என்ன செய்வோம் ஈசுவரா" என்று திகைக்கையிலேயே, வசந்தசேனை நிசமாகவே தன்னிடமிருந்த மதனிகையைக் கூப்பிட்டு, "இன்று முதல் நீ இவருக்குப் பத்தினியாய்விட்டாய். இவருடன் புறப்பட்டுப்போ" என்று இருவர்களுக்கும் வெகுமானம் கொடுத்தனுப்பினாள்.

இவைகளைக் கண்டு சர்விலகன் ஆனந்த மடைந்து இந்த உலகத்தில் சாருதத்தன் ஒருவனல்லவோ மனிதன். நாமெல்லாம் பதர். அவன் பேர் சொன்னமாத்திரத்தில் நம்மையறியாமல் நமக்கு க்ஷேமம் பிறந்தது என்று நினைத்து நினைத்து சந்தோஷமடைந்துகொண்டே மதனிகையுடன் புறப்பட்டுப் போய்க்கொண்டிருந்தான். அவன் சொன்னது நிசமே. குணம்மட்டிலிருந்தால் ஒரு மனிதன் எப்பொழுதும் மேன்மை பெறுவான். குணமிருந்தபடியால் தான் ஒருவராலும் எட்டிப் பார்க்கக் கூடாத ஜகதீசன் தலையில் சந்திரன் ஏறினான். சர்விலகன் மதனிகையுடன் புறப்பட்டவுடன் ஒரு பெரிய சத்தமுண்டாயிற்று.

"இடைச்சேரியில் பிறந்து வளர்ந்த ஆரியகன் அரசனாகப் போகிறான் என்பதைச் சோசியர்களால் கேட்டு பாலகன் என்ற நமது அரசன் அவனைப் பிடித்து வந்து கொட்டடியில் வைத்திருக்கிறான். எல்லாரும் சாக்கிரதையாயிருங்கள்" என்ற சத்தமுண்டாயிற்று. இதைச் சர்விலகன் கேட்டதும் "அப்படியா நமக்கு வேண்டியவனை ஆரியகனைப்பிடித்து அரசன் கொட்டடியில் வைத்தானா! நான் எல்லாரையும் போய்த் தூண்டி விட்டு என் நேசனை ஆரியகனை விடுவிக்கிறேன்" என்று சொல்லி ஒரு வண்டியில் மதனிகையை ஏற்றி ரேபிலகன் வீட்டிலிருக்கச்சொல்லி அனுப்பிவிட்டுத் தான் வேகமாக எங்கேயோ ஓடிவிட்டான்.

மதனிகையும் சர்விலகனு மிப்படிப் புறப்பட்டுப் போனதும் சாருதத்தனு லனுப்பப்பட்ட விதூஷகனை மைத்ரேய [illegible] தன் [illegible] மானியினுடைய இரத்தின

மாலையை எடுத்துக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தான். அவனைக் கண்டதும் அவனுக்கு வசந்தசேனை உபசாரஞ் செய்து "குணத்தையே துளிராகவும், வணக்கம் என்பதை கிளையாகவும், அமரிக்கை என்பதை வேராகவும், பெருந்தன்மையையே பூவாகவும், நன்னெறியைப் பழமாகவுமுடைய அந்த சாது என்ற மரத்தை சிநேகிதர்களென்ற பறவைகள் அணுகுகின்றனவா" என்றாள். சாருதத்தமகானை அவன் சிநேகிதர்கள் அடிக்கடி வந்து பார்க்கிறார்களா என்று கேட்டபடி. ஏனெனில் சாருதத்தனுக்கு துக்கமெல்லாம் தான் ஏழையாய்ப் போன பிறகு ஜனங்களுக்குத் தன்பேரில் அன்பும் நேசமும் போய்விட்டனவே என்ற துக்கமேயல்லாது பணம்போன துக்கமேயில்லை. இப்படி இவள் கேட்ட இரண்டொரு கேள்விக்கு மைத்திரேயன் பதில் சொல்லிவிட்டு நேற்றையதினம் நமது யஜமானர் சதுரங்க ஆட்டத்தில் தங்களுடைய நகைகளைத் தோற்றுவிட்டார். அதற்குப் பதிலாக இந்த இரத்தின மாலையை அனுப்பினார் என்று சொல்லி ரத்னாவளியைக் கொடுத்தான். அதைக் கேட்டதும் வசந்தசேனை மனம் பூரித்து தனக்குள்ளேயே 'என்னப்பனே! சாருதத்தா! உன்னிடமிவ்வளவு நற்குணங்களிருக்கிறபடியாலல்லவோ நான் என் சாதிக்கு விரோதமாய் உன்னைச் சரணமாயடைந்தேன். திருடன் நகையைத் திருடிப்போனான் என்றால் ஜனங்கள் நம்பமாட்டார்கள் என்று பயந்து என்னுடைய கொஞ்ச விலையுள்ள காப்புக்கும் சங்கிலிக்கும் பதிலாக நாலு சமுத்ரங்களையும் வாங்கும்படியான விலை பொருந்திய நகையை அனுப்பினை [illegible] குணசாலி' என்று

ஆனந்தத்தால் பூரித்து, நலலது நாம் இதை இப்பொ
ழுது வாங்கிக்கொண்டு இம்மகான் சேவைக்குச் சாயங்
திரம் போவோம் என்றாலோசித்துக் கையை நீட்டி நகை
யைப் பெற்றுக் கொண்டாள். பிறகு விதூஷகனை
நோக்கி "தாங்கள் போய் தங்கள் சூதாடியை நான்
சாயந்திரம் பார்க்க வருவதாக சொல்லுங்கள்" என்ற
னுப்பிவிட்டாள்.

மைத்திரேயன் போனபிறகு, எப்பொழுது அஸ்
தமிக்கப்போகிறது; திருடன் கொண்டுபோன நகை
யைத்தான் சூதாட்டத்தில் தோற்றுவிட்டதாகச் சொல்லி
இரத்தினமாலையை யனுப்பின நமது நற்குண நாயகனைப்
பார்க்கப்போகிறோம் என்று சூரியாஸ்தமனத்தை வசந்த
சேனை எதிர்பார்த்தவளா யிருந்தாள். அன்றையதினம்
மழை எங்கிருந்தோ வந்து விட்டது. அன்னப்பறவை
களெல்லாம் ஓடிவிடவும் மயில்களெல்லாம் கொண்டாட
வும் காலமாகவிருந்தது. நிரப்ப ஜலத்தைக் குடித்துக்
காட்டெருமைபோற் கறுத்திருந்த மேகங்களே ஸ்ரீமந்
நாராயணனுடைய தேகமாகவும் அக்கார் மேகங்களில்
அப்போதைக் கப்போதுண்டாகும் மின்னற்கொடிகளே
அவரது திருமேனியிற் சாத்திய பீதாம்பரங்களாகவும்
அம்மேகங்களின் கீழ்ப் பறக்கும் கொக்குகளே அவரது
திருக்காளத்தில் பிடித்த சங்கமாகவும் ஜனங்கள் சொல்
லும்படி ஆகாயமே கேசவாவதார மன்றெடுத்தது. லட்
சஞ்சேர் வெள்ளியை உருக்கி வார்க்கும்போது குவளை
முறிந்து சிதறின வெள்ளி ரசங்களாகிய ரவைகள்போல
மேகங்களினின்று தாரைதாரையாய் மழை பொழிந்தது.
மின்னல் என்ற விளக்கா[illegible]ளாளுத்தப்பட்டு மேகமென்

னுந் துணி கிழிந்தது, அதனுடைய நூல்கள் உதிர்ந்தனபோல் தாரைகள் விழத்தொடங்கின. தாங்கள் குடித்த நீரைக் கக்கிவிட்டுக் காற்றால் கலைக்கப்பட்டு ஓடும் மேகங்கள் சிலவிடங்களில் சக்கரவாகப் பட்சிகளைப் போலும், சில விடங்களில் அன்னங்கள்போலும், சில விடங்களில் மீன்கள்போலும், முதலைகள் போலும், விசித்திர விசித்திரமாகச் சித்திர மெழுதுகிறவர்கள் நினைத்து அவைகளைப் பார்த்து எழுதும்படியான அவ்வளவு அழகுள்ளவைகளாய் ஓட ஆரம்பித்தன.

திருதராஷ்டிரன் கண்கள் மறைக்கப்பட்டனபோல மேகங்களால் ஆகாயம் மறைக்கப்பட்டது. துரியோதனன் கர்வித்துக் கூச்சலிடுவதுபோல மயில்கள் கேகாவென்று கத்திக்கூத்தாடின. சொக்கட்டானாட்டத்தில் வெல்லப்பட்ட யுதிர்ஷ்டிரர்போல் கோகிலங்கள் ஓடிவிட்டன. பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் போனதுபோல் அன்னங்களிருந்தவிடந் தெரியாமல் ஓடி மறைந்துவிட்டன.

தன் நாயகனைக் காட்டில் விட்டுப்பிரிந்து கதறும் பெண்போல மேகங்கள் மலையினுச்சியில் கர்ச்சித்தன. இக்கர்ச்சனையைக் கேட்டுத் திடீரென்று ஓடும் மயில்களின் தோகைகளினால் கற்களாலிழைக்கப்பட்ட விசிறிகளால் வீசப்பட்டதுபோலாகாயம் விளங்கிற்று.

இம்மாதிரி மழை பெய்துகொண்டிருக்கையிலேயே வசந்தசேனை தனது விதூஷகனுடன் புறப்பட்டு சாருதத்தன் வீடு வந்து சேர்ந்தாள். இவளைச் சாருதத்தன் எதிர்பார்த்திருந்தவனாதலால் இவளுக்குத் தக்க மரியாதைகள் செய்தான். பிறகு அன்று இராப்பொழுதைத் தங்களுடைய யௌவன சுக[illegible] கழித்தார்கள்.

உச்சயினி பட்டணத்திற்கு வெளியில் சாருதத்தனுக்கு ஒரு தோட்டமுண்டு. வசந்தசேனை தூங்கி எழுந்திருந்தவுடன் அவளைத் தன் வண்டியிலேற்றி அங்கு அழைத்துவர ஏற்பாடு செய்துவிட்டு விடிய ஒரு நாழிகைக்கெல்லா மெழுந்திருந்து சாருதத்தன் அங்கு போய் விட்டான். வசந்தசேனையும் காலமே எழுந்திருந்து சாருதத்தனை விசாரிக்கையில் அவன் தன்னை வண்டியில் வர ஏற்பாடு செய்துவிட்டு முன்னமே புறப்பட்டுத் தோட்டத்திற்குப் போனதாகத் தெரியவந்தது. அப்படியே செய்ய உத்தேசித்துத் தான் இன்னும் ஒரு நாழிகைக்குட் புறப்படுவதாகவும் வண்டி வாட்டும் என்று சொன்னாள். தான் நேற்று பெற்றுக்கொண்ட ரத்தின மாலையைச் சாருதத்தனிடம் காட்டி திருட்டுப்போன தனது நகைக்காக இப்படி நாலு சமுத்திரங்களையும் விலைகது வாங்கக்கூடிய ரத்தினாவளியை யனுப்பலாமா என்று சொல்லி நகைகளைத் திருடினவனையும் அவைகள் தன்னிடம் வந்து சேர்ந்த விதத்தையும் சொல்லியிருந்தாள். மறுநாள் காலமே தூதிகை என்ற சாருதத்தன் மனைவியிடம் சென்று அவளிடம் அந்த நகையைக் கொடுக்கவே அந்த அம்மணியும் அம்மா நீயே எனது புருஷனுடைய பிரியத்திற்குப் பாத்திரமாய் விட்டபடியால் இதைப் போட்டுக்கொள் என்று நகையை வசந்தசேனை கழுத்தில் அணிந்தாள். சூரியனும் உதயமாய் இரண்டு நாழிகையாய் விடவே சடுதியில் சாருதத்தனைத் தோட்டத்தில் பார்க்கவேண்டுமென்று தனது முகத்தை அலங்கரித்துக்கொள்ள உட்சென்றாள். இந்த சமயத்தில் ரதனிகை என்னும்

சாருதத்தனுடைய வேலைக்காரி ரோஹஸேனன என்ற தனது எஜமானன் குழந்தையை இடுப்பிலெடுத்துக் கொண்டு அவன் கையில் மண்ணாற் செய்யப்பட்ட ஒரு வண்டியை "இதை வைத்துக்கொண்டு விளையா டப்பா என் குழந்தாய்" என்று சொல்லிக்கொண்டு வச ந்தசேனை சிங்காரித்துக்கொண்டிருந்த இடம் வந்து சேர்ந்தாள். ரோஹஸேனனும் தனது தகப்பனுர் போலக் கம்பீர வடிவுள்ளவனுகை விருந்தபடியால் "யாரிந்தக் குழந்தை வா அப்பா" என்று அவனைத் தனது கைக ளால் வாரி எடுத்து வசந்தசேனை முத்தமிட்டாள். இவன் நமது யஜமானருடைய மனோரதத்தின் பலம்; அவர் குமாரன் என்று சொல்லவே, வசந்தசேனை ரோஹஸேனன் பேரில் தனது பிள்ளைபோல் அன்பு வைத்து மறுபடியும் எடுத்து மடியில் வைத்து உச்சிமுகர்ந்தாள். இப்படிச் செய்யும் ஸ்திரீயைக் கண்டு அக்குழந்தை வியப்புற்று தனது தாதியாகிய ரதனிகையைப் பார்த்து "யாரிவள் ரதனிகே" என்று கேட்கவே, அதற்கு அவளும் மரியா தையாகவே "இவளும் உன் அம்மா, குழந்தாய்" என்றாள். அதற்கு ரோஹஸேனனும் ரதனிகையைப் பார்த்து "இல்லை இல்லை. நீ பொய் சொல்லுகிறாய். எனக்குத் தெரி யாதோ. நம்மம்மாவுக்கு இத்தனை நகை ஏது சொல்லடி" என்றான். இதைக்கேட்டு வசந்தசேனை ஆ! ஆ! தெய் வமே! பணத்தில் படுத்துறங்கின சாருதத்த மகாராஜன் குழந்தை கூட "அம்மாவுக்கு இவ்வளவு நகை ஏதடி" என்று கேட்கும்படியாய் வந்ததே என்று பரிதபித்தாள். இப்படி இவள் தவிக்கையில் குழந்தையும் அழக்கண்டு என் என் கண்மணி அழுகிறது என்று ரதனிகையை

வந்து நின்றது. வண்டிக்காரனும் தான் தயாராக விருப்ப-தாகச் சொல்லி அனுப்பினன். அதற்கு வசந்தசேனை அரைநாழிகைக்குள் தான் வருவதாகவும் அதுவரையில் காத்திருக்கட்டும் என்றும் கட்டளையிட்டாள். பெண்டுகள் போகிற வண்டியாதலால் நன்றாய் நாலுபக்கங்களிலும் மூடப்பட்டிருந்தது. வண்டிக்காரன் கதவைத் திறந்து பார்க்கவே அதில் ரத்தின கம்ளபத்தைக் காணேம். ஓகோ நாம் புறப்படும் அவசரத்தில் வண்டிக்கு விரிப்புப் போடாமல் வந்து விட்டோம். யஜமானி அரைநாழிகை காத்திருக்கச் சொல்லியிருக்கிறாளே இதற்குள் விரிப்பை எடுத்து வருவோம் என்று வண்டியுடன் காடிகானவுக்குச் சென்றான்.

இந்த சங்கதி இப்படியிருக்க சகாரன் மூடுவண்டி ஒன்று அந்த ரஸ்தா வழியாய்ப் போய்க்கொண்டிருந்தது. சாருதத்தன் வாசல்முன் வந்ததும் அப்புறம் அது போகக்கூடாமல் முன் ரஸ்தாவில் அநேக வண்டிகள் குடை கவிழ்ந்திருந்தன. அந்த வண்டிக்காரர்களும் சகாரன் வண்டிக்காரனைக் கொஞ்சம் தங்கள் வண்டிகளை ஒரு கைகொடுத்து எழுப்பிவிடும்படி கேட்டுக்கொண்டார்கள். அவனும் அப்படியே செய்ய உத்தேசித்துச் சாருதத்தன் வாசல்முன் தன் வண்டியை நிறுத்திவிட்டுக் குடைகவிழ்ந்த வண்டிகள் சக்கரங்களைப் புரட்டப் போனன். இவன் போனதும் வசந்தசேனை வெளியில் வந்து வாசலில் நிற்கும் வண்டியில் தன்வண்டி என்று ஏறிக் கதவைச் சாத்திக்கொண்டாள். முன் வண்டி குடை கவிழ்ந்திருந்ததும் வண்டிக்காரர்களெல்லாம் அங்கு குடை எடுத்துவிட்டுக் கொண்டிருந்ததையுங்

கண்டு தன் வண்டிக்காரனுமங்கிருந்ததாக எண்ணி விட்டாள். முன்வழி சரியானவுடனே சகாரன் வண்டிக்காரன் தன் வண்டியை தனது யஜமானன் பட்டணத்திற்கு வெளியிருந்த தோட்டத்திற்கு ஓட்டிக்கொண்டு போனான். ஐயோ! அந்த வண்டியிற்றான் வசந்தசேனையும் உட்கார்ந்துகொண்டு தனது அன்பனாகிய சாருதத்தனைப் பார்க்கப்போவதாக உத்தேசித்துப் போனது. வண்டி நகரும்பொழுதே இவள் வலதுகண் துடித்தது. "ஐயோ! வலதுகண் துடிக்கிறதே என்ன கஷ்டம். நமக்கோ அல்லது நமது அன்பருக்கோ தெரியவில்லையே. எல்லாக் கஷ்டமும் அவருடைய முகத்தைப் பார்த்தால் தீரும்" என்று எண்ணி மனதைத் தேற்றிக்கொண்டாள்.

இப்படி இந்த சகாரன் வண்டி போனவுடன் ஒரு பெரிய கலகலசப்தமுண்டாயிற்று. பாலகன் என்ற கொடுங்கோன் மன்னன் அப்பொழுது அரசனென்பது எல்லாருக்கும் தெரியுமல்லவா. அவன் இராச்சியம் கொஞ்சநாள் தான் என்றும், இடைச்சேரியிலிருந்து ஆரியகனென்ற ஒரு மகாபுருஷன் சீக்கிரம் அரசாளப்போகிறான் என்றும் ஒரு சித்த புருஷன் சொல்லியிருந்தான். இதைப் பாலகனறிந்து ஆரியகனைப் பலாத்காரமாகப் பிடித்து கைகால்களில் விலங்குபோட்டு கொட்டடியில் வைத்தான். ஆரியகன் கக்ஷியில் அநேகம் பேர் சுபாவமாகவே சேர்ந்திருந்தார்கள். ஆரியகனும் வசந்தசேனை சகாரன் வண்டியில் தப்பி ஏறிப்போன அன்று காலமே தன் விலங்குகளை முறித்துக்கொண்டு கொட்டடியை விட்டு வெளிக்கிளம்பிவிட்டான். இவன் ஓடிவிட்டான்

என்ற சமாசாரம் இராசனாகிய பாலகனுக்கு தெரியவந்த-வுடன் ஊர்முழுவதும் தன் சேவகர்களை யனுப்பி எப்படியாவது ஆரியகனைப் பிடித்து வரும்படி உத்திரவிட்டான்.

விலங்கு முறித்துக்கொண்டு ஓடிவிட்ட ஆரியகனும் காலில் சங்கிலி கலகல என்று இழுத்துக்கொண்டுவர கட்டுத்தறித்து வோடும் மதயானைபோல ஓடத் தலைப்பட்டான். இப்படி இவன் தப்புவதற்கு உதவி செய்தவன் சாருதத்தன் வீட்டில் கன்னம் வைத்த பிராமணனாகிய சர்பிலகனே. இவன் ஆரியகன் கக்ஷியைச் சேர்ந்தவனென்று நாம் முன்னமே சொல்லியிருக்கிறோம்.

"பாலகனுக்குப்பிறகு நான் ராஜாவாக வேண்டுமென்பது என் தலையிலெழுதியிருந்தால் அதற்கு நான் என்ன செய்வேன். என்பேரில் என்ன குற்றம்; நடக்க வேண்டியது நடந்தே தீரும்" என்று நினைத்துக்கொண்டு ஆரியகன் ஓடும்பொழுது சாருதத்தன் வீடு திறந்திருக்கக்கண்டு "இது யார் வீடோ தெரியவில்லை தெய்வாதீனமாகத் திறந்திருக்கிறது. நிலற்றுக் கதவற்றுக் கிடக்கிறது. நம்மைப்போல் துர்ப்பாக்கியமுள்ள ஒருவனுடைய வீடாயிருக்கவேண்டும்" என்று எண்ணி உட்சென்றான்.

இவன் உட்சென்ற அரை நிமிஷத்திற்கெல்லாம் விரிப்பெடுக்கப்போன வண்டிக்காரன் சாருதத்தனிருந்த தோட்டத்திற்கு வசந்தசேனையை அழைத்துப் போக வாசலில் வண்டியைக் கொண்டுவந்து நிறுத்தி வண்டி தயாராக இருக்கிறது என்று சத்த மிட்டான். ஊருக்கு வெளியில் பெண்களை அழைத்துப்போக மூடு வண்டி வாசலில் வந்து சேரவே அதை ஆரியகன் உள்

ளிருந்து பார்த்து "நமது அதிர்ஷ்டந்தானிது. இதிலேறி உட்காருவோம். நம்மை இது வெளியில் கொண்டுபோகும். நாம் தப்பி விடுவோம்," என்று நினைத்துச் சரேலென்று அவ்வண்டியிலேறிக்கொண்டான். இவன் கால் விலங்கும் கல் கல் என்று சத்தஞ்செய்தபடியால் பாதசலங்கையணிந்த நமது யஜமானிதான் வண்டியிலேறினாள் என்று நினைத்து ஹை ஹை என்று வண்டிக்காரன் வண்டியை சாருதத்தன் தோட்டத்திற்கு ஓட்டிக்கொண்டு போனான்.

ஆரியகன் கோட்டையை விட்டு வெளிக்கிளம்பிவிடவே ஆள்போய்விட்டான் என்று ஊரெல்லாமல்லோலகல்லோலப்பட்டிருந்ததாக முன்னமே சொன்னோமே. சாருதத்தன் வண்டிபோகும் ரஸ்தாவில் சந்தனகன், வீரகன் என்ற இரண்டு சேவகர்கள் தப்பிப்போன கைதியைப் பிடிப்பதற்காக அங்குமிங்கும் சுற்றிக்கொண்டிருந்தார்கள். மூடிவண்டிவர அவர்கள் கண்டதும் "யாருடையது வண்டி எங்கு போகிறது யார் ஏறிக்கொண்டு போகிறார்கள் நிறுத்து பார்ப்போம்" என்றார்கள். உடனே வண்டிக்காரன் "சாருதத்த மகாராஜாவருடைய வண்டி. அவர் தோட்டத்திற்குப் போகிறது. வசந்தசேனை ஏறிப்போகிறாள்" எனவே, அதற்கு சந்தனகன் அப்படியா அந்த மகாபுருஷனுடைய வண்டியானால் நாம் பரிசோதிக்கவே வேண்டாம். அது போகட்டும். அந்த குணம் என்ற தாமரைப்பூவை நன்னடத்தை என்ற சந்திரகலையை யார்தானறியமாட்டார்கள் போகட்டும் என்றான். அதற்கு வீரகன் கூடாது நான் பரிசோதித்துத்தான் விடுவேன். யாராயிருந்தாலும் ராஜகாரியமாதலால் வண்டியைப் பரி

சோதித்துத்தான்விட வேண்டும் என்றான். உடனே பரி சோதிப்பதற்காக சந்தனகன் வண்டியிலேற வீரகன் வண்டி நுகத்தடியைத் தூக்கிக்கொண்டான். சந்தனகன் வண்டிக்குள் வந்ததும் ஆரியகன் அவன் காலைக் கெட்டி யாய்ப் பிடித்துக்கொண்டு இந்த சமயத்தில் எனக்கு உயிர்பிச்சை கொடுத்துக் ஆதரித்தால் நான் பிறகு அர சனானால் உன்னை மறக்கமாட்டேன் என்றான். உடனே சந் தனகன் மிகவும் நல்ல குணமுள்ளவனாகையால் அப் படியே அபயங்கொடுத்து வண்டியை விட்டுக் கீழே இறங்கி "பார்த்தேன் அவனை, இல்லை அவளை, போகட் டும் வண்டி." என்று சந்தனகன் பதறிச் சொன்னான். இதை வீரகன் கேட்டு "பார்த்தேன் அவனை, இல்லை அவளை" என்று நீ சொன்னதில் எனக்கு ஏதோ சந்தே கம் தோன்றுகிறது. நானும் பார்க்கவேண்டும் என் றான். "அப்படியானால் நான் பார்த்ததில் உனக்கு அவ்வளவு அவநம்பிக்கையா" என்று சந்தனகன் கேட்க, "இல்லை அவனை, இல்லை அவளை" என்று நீ சொன்னபடியால் எனக்கு உன் பேச்சில் நம்பிக்கை யில்லை. நானும் வண்டியைப் பரிசோதிக்கத்தான் வேண்டுமென்று வீரகன் சொல்ல இவ்விருவர்களுக்கும் சண்டையுண்டாய் விட்டது. "நான் பார்த்த வண் டியை நீ மறுபடி பார்க்க உனக்கென்ன அவ்வளவு அதி காரம்" என்று சந்தனகன் வீரகனைப்பார்த்துச் சொல்ல இவ்விருவர்களுக்கும் கொஞ்சங் கொஞ்சமாய்ப் பேச்சு முற்றி சண்டையுண்டாய் விட்டது. அச்சண்டையில் வீரகன் நன்றாயடிபட்டு, சந்தனகன் செய்த அநியா யத்தை அரசனிடம் முறையிடச் சென்றான். உடனே சந்

னகனும தனது பட்டாக்கத்தியை உருவி சாருதத்தன் வண்டியிலிருந்த ஆரியகனிடம் அடையாளமாகக் கொடுத்து இனி யாராவது இவ்வண்டியைச் சோதிக்க வந்தால் முன்னமே சந்தனகன் சோதித்திருக்கிறான். அதற்கடையாள மிந்தக்கத்தி என்று காட்டி வண்டியை ஓட்டிப் போகச் சொன்னான். ஆரியகனும் சந்தனகன் நமக்கு பூர்வ சன்மத்தில் பந்து. நமக்கு கையில் ஒரு ஆயுதத்தையுங் கொடுத்தான். நற்சகுனமாக நமது வலது கண்ணுந் துடிக்கிறது. நமது கக்ஷியில் ஈசுவரனிருக்கிறார் என்று நினைத்துக்கொண்டே போனான். வண்டிக்காரனுக்கு மட்டில் வசந்தசேனையே தான் வண்டிக்குள் போவதாக எண்ணம்.

சந்தனகனும் இனி நாமிங்கிருப்பதில் பயனில்லை. ஊர்காவல் வீரகனை நாம் பகைத்துக்கொண்டு விட்டோம். என்ன சமயத்தில் என்ன வருமோ என்று பயந்து தனது பெண்சாதி பிள்ளைகள் சகிதம் ஆரியகன் கக்ஷியைக் கைபற்றிச் சர்விலகனிடம் போய்ச் சேர்ந்தான்.

பட்டணத்திற்கு வெளியில் தனது தோட்டத்தில் எப்பொழுது வசந்தசேனை வரப்போகிறாள், ஏனிவ்வளவு தாமதம் என்று சாருதத்தன் தனது ஒரே தோழனாகிய மைத்திரேயனிடம் பேசிப்பேசி விசாரப்பட்டுக்கொண்டிருந்தான். அத்தோட்டத்தின் மரங்கள் எல்லாம் வியாபாரிகள் போலவும், அதில் பூத்திருந்த புஷ்பங்கள் வியாபாரச் சரக்குகள் போலவும், அவைகளின் தேனை உண்டு போகும் வண்டுகள் சரக்கு பிடித்துக்கொண்டு போகும் வியாபாரிகள் போலவும் தென்பட்டன. "ஏன் நமது வண்டி வரவில்லை மைத்திரேயா! நடுவில் அச்சு ஒருகால்

மூழ்ந்திருக்குமோ மாட்டுக் கயிறு ஒருகால்போயிற்றோ அல்லது வழிதப்பி மயங்குகிறானோ வண்டிக்காரன்" என்று விசாரப்படுகையிலேயே வண்டி ஓசையும் கேட்டது. உடனே திரும்பிப்பார்க்கத் தன் வண்டியாக விருக்கக் கண்டு அதிலிருக்கும் வசந்தசேனையைப்பார்க்க இருவரும் சென்றார்கள்.

வண்டி தோட்டத்திற்குள் நுழைந்ததும் "நல்லது நாம் இதுவரையில் வந்தோமே இப்பொழுது குதித்து ஓடிவிடுவோமா அல்லது அந்த மகானுபாவன் சாருதத்தனைப் பார்த்துவிட்டே போவோமா" என்று ஆரியகன் ஆலோசிக்கையிலேயே அங்கு சாருதத்தன் வந்து சேர்ந்தான். அந்த மகா புருஷனைக் கண்டு ஆரியகன் கண் கூச்சுண்டு காலில் விழுந்து நடந்ததை நடந்தபடி சொன்னான். அவைகளை எல்லாங்கேட்டு சாருதத்தன் சந்தோஷப்பட்டு ஆரியகன் கால்விலங்குகளைத் தறித்துப் பாழுங் கிணற்றிற்போட்டு அவனைத் தனது வண்டியிலேயே அவனிருப்பிடம் போய்ச்சேர அனுப்பினான். ஆரியகனும் இந்த உபகாரத்தை நான் ஒருபொழுதும் மறக்கேன் என்று சொல்லி சாருதத்தனிடம் விடை பெற்று அவன் வண்டியிலேயே சர்விலகன் முதலான தனது கக்ஷிக்காரர்கள் சேர்ந்திருக்குமிடம் போய்ச் சேர்ந்தான்.

அவன் போன பிறகு நமது வண்டியில் ஆரியகனேறி வந்தானே, வசந்தசேனை கதி என்னமாயிற்றோ என்று யோசிக்கையிலேயே தனது இடதுகண் துடிக்கக் கண்டு அச்சமுற்று "மைத்திரேயா வா, சீக்கிரம் வீடு போவோம். வசந்தசேனையைப் பாராத என் மனம் பதைக்

கிறது" என்று சொல்லி அவனை அழைத்துக்கொண்டு புறப்படுகையிலேயே ஒரு பௌத்த சன்னியாசி எதிர் வரக்கண்டு "ஐயோ! இந்த அபசகுனமும் வேண்டுமா வசந்தசேனை என்ன மானுளோ" என்று விரைக்க வீட்டைப்பார்க்க சாருதத்தன் திரும்பிவிட்டான்.

வீடு வந்ததும் வசந்தசேனை தன் நகைகளைக் கழற்றி ரோஹஸேனன் விளையாட்டுக்காக அவன் வண்டியிற் போட்டுவிட்டு வீட்டிற்கோ அல்லது தோட்டத்திற்கோ வண்டி ஏறிக்கொண்டுபோனுள் என்று தெரியவந்தது. உடனே அவள் நகைகளை எல்லாம் எடுத்து மைத்திரேயனிடங் கொடுத்து "அப்பா, இந்த ஆபரணங்களை யவளிடம் சேர்ப்பித்து அவள் க்ஷேமத்தை அறிந்து வா" என்று அனுப்பினுன். அவனும் சீக்கிரம் போவதாக நகைகளை வாங்கிக்கொண்டான்.

சகாரன் மகா கொடிய பாவி என்றும் வசந்தசேனையை அநேகந்தடவை சுற்றித் தொடர்ந்திருக்கிறுன் என்றும் நாம் முன்னமே சொல்லியிருக்கிறேமல்லவா. அந்த வசந்தசேனையே தனது விதிவசத்தால் தெரியாத்தனமாக சாருதத்தன் வண்டி என்று சகாரன் வண்டியிலேறிக்கொண்டு போனதையும் நாம் முன்னமே சொன்னேமே. அந்த வண்டியோ சகாரனை வீட்டிற்கு அழைத்து வரப்போன வண்டி. வெகு நாழியாயும் வண்டி வாராமலிருந்தது. துஷ்டர்களுக்கு எப்பொழுதும் கெட்ட செய்கையிலேயே ருசியாதலால் அங்கு ஸ்நானம் பண்ணவந்த ஒரு பௌத்த சன்னியாசியைப் பிடித்துக்கொண்டு சகாரன் தொந்தரை செய்யத் தலைப்பட்டான். வீடு வாசலற்றுக் காய் கிழங்கு இலைகளைப்

புசித்துக்கொண்டு திரியும் சன்னியாசிகளை உபத்திரவித்தால் யாருக்குத்தான் மனம் பதைக்காது. சகாரன் அந்த பௌத்த சன்னியாசியைச் செய்யாத உபத்திரவமெல்லாஞ்செய்து வந்தான். நீ பிறந்தபொழுதே சன்னியாசியாக ஏன் பிறக்கவில்லை என்று இந்தத் துஷ்டாத்மா அந்த மகாத்மாவைப் பீடிக்கத்தலைப்பட்டான். இவைகளை எல்லாம் சகாரன் கிட்டவிருந்த விடன் கண்டு நல்லவார்த்தை சொல்லி மெதுவாய் அவனைத் தப்பிக்கச்செய்தான்.

சன்னியாசி தப்பி ஓடினதும் வண்டி வந்தது. "ஏன் இத்தனை நாழிகை தாமதித்தாய்" என்ற சகாரனுடைய குரல் வசந்தசேனை காதில் விழவே, அவள் நடுநடுங்கி ஓ! ஓ! காரியம் மோசமாயல்லவோ முடிந்தது. என்ன செய்யப் போகிறேன் ஈசுவரா" என்று குற்றுயிராய்ப் போய்விட்டாள். உடனே வண்டியிலேற விடன் வந்து அதில் வசந்தசேனை யிருக்கக்கண்டு என்ன விபரீதம். வெளுத்த மணற்குன்றுகளில் தெளிந்த நதிக்கரையில் விளையாடிக்கொண்டிருக்கும் அன்ன புருஷனை அன்னப் பெண் விட்டு காக்கையை நாடுவளா என்று அச்சமுற்றான். அதற்கு வசந்தசேனை விடன் காலைப் பற்றிக்கொண்டு "என்பேரில் சந்தேகம் வேண்டாம். வண்டி தப்பி ஏறி வந்து சேர்ந்தேன். என்னை ரக்ஷித்தருளும்" என்றாள். அப்படியே ரக்ஷிப்பதாக ஒப்புக்கொண்டு விடன் வண்டியிலிருந்து கீழே குதித்து அடா யப்பா; ஒரு பெரிய பிசாசு இங்கே யிருக்கிறது என்றான். பிசாசாயிருந்தால் உன்னை எப்படி விட்டது பார்ப்போமென்று சகாரனும் வண்டி பண்டை வந்து பார்த்து வசந்தசேனையாக விருக்கக் கண்டு அவளைத்தன் வண்டியில் உட்காராதே இறங்கு

கீழே என்றான். அவளும் கீழ்வந்து ஒரு மரத்தடியில் போய் மயங்கி நின்றாள். அநேக விதமாய் அவள் மன தைக் கவர சகாரன் சொல்லிப்பார்த்தான். அவளோ சாதி யில் வேசியாயிருந்தும் குணத்தில் குலப்பெண்ணுக்கு மேலென்று சொல்லியிருக்கிறோமே. சகாரன் பேசும் பேச் செல்லாம் அவள் கோபத்திற்கு நெய்விட்டாற் போலா யிற்று. சகாரன் அவள் காலில் விழுந்தும் பார்த்தான். அதற்கு அவள் தனது இடது காலால் அவன் தலையி லுதைத்தாளேயன்றிக் கொஞ்ச மேனு மிணங்கவில்லை. தலையில் உதை விழவே சகாரனுக்குக் கோபம் பொறுக்கக் கூடவில்லை. "ஒரு நாளும் ஒரு தெய்வத்தைக்கூட நோக்கி வணங்காத தலை இன்று உன்னை வணங்கினால் நீ உதைக் கிறமட்டு மாயிற்று பார் உன்னைக்கொன்றுவிடுகிறேன்" என்றான். உடனே விடனைப்பார்த்துச் சகாரன் நீ இவ ளைக் கொன்றுவிடு உனக்கு அநேகம்பொன் தருகிறேன் எனவே, அதற்கு அவன் இந்த நகரத்துக்கு அலங் காரமாக விளங்கும் இப்பெண்மணியை வதைத்துவிட்டு நான் பரலோகம் என்ற நதியை எந்தத்தெப்பத்தைக் கொண்டு கடப்பேனென, அதற்குச் சகாரன் நான் நூறு தெப்பம் பண்ணித் தருகிறேன். ஒருவரும் உன்னைப் பார்க்கமாட்டார்கள் கொல் என்றான். விடன் "அடா மூடா, பத்து திசைகளும் நம்மைப் பார்க்கின்றனவே, வனதேவ தைகளும் சந்திர சூரியர்களும் ஆகாசமும் பூமியும் நம் மைப் பார்க்கின்றனவே" என்று சொல்லி நாம் அருகா மையிலிருப்பதால் வசந்தசேனை இவனுக்குப் பிடிப்புக் கொடுத்துப் பேசாமலிருக்கிறாளோ என்னமோ என்று மறைந்தான்.

சகாரன் கொண்ட கருத்தோ நிசமான கெட்ட கருத்து. குற்றமற்ற அப்பெண்மணியைக் கழுத்தைப் பிசைந்து கொன்றுவிட்டான் என்கலாம். இப்படி இவன் செய்த கொலையைத் தூரத்திலிருந்து பார்த்த விடன் வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொண்டு இனி இந்தப் பாபத்தை நான் எங்குபோய்ப் போக்குவேன், இந்தத் துஷ்டனுடைய சகவாசம் போதுமென்று விடன் சர்விலகனிடம் ஓடிவிட்டான். அவன் ஓடிவிடவே தனது சேடன் ஒருவன் மாத்திரம் தான் செய்த காரியத்துக்குச் சாட்சியாகையால் சகாரன் அவனைத் தனது வீடுகொண்டு போய் மாடியின்பேரில் இருப்புச் சங்கிலி போட்டுத் தூணிற் கட்டிவிட்டான்.

தோட்டத்தில் வசந்தசேனையைச் சகாரன் கொன்று அவளை அங்கிருந்த குளக்கரையருகிற் போட்டு மேலே சருகைத் தூவி வீடுபோய்ச் சேர்ந்தான். நல்லது இவளைத்தான் கொன்றுய்விட்டது. இனி நாம் செய்யவேண்டியதென்னவெனில் இவள் நாயகனுகக் கொண்டாடிவந்த சாருதத்தனை நாசஞ் செய்யவேண்டும். அது எப்படியாகுமென்றால் இவள் நகைக்காக ஆசைப்பட்டு அவனே இவளைக் கொன்றதாகப் பொய்ப்பிராது செய்து விசாரணைக்குக் கொண்டு வந்துவிடுவோம், தரித்திரன் தலைமேல் என்னவித குற்றஞ் சுமத்தினுற்றான் செல்லாது என்று நினைத்து அந்தப்படி என்னென்ன செய்ய வேண்டுமோ அவைகளுக்குத் தக்க ஏற்பாடு செய்தான். இந்த சகாரன் வெகு துஷ்டன். நல்ல சங்கதிகள் இவனுக்கு ஒன்றுந் தெரியாவிடினும் சூது, வாது, பொய்ப்பிராது இவைகளில் சமர்த்தன்.

முன்னமே நாம் ஸம்வாககன் என்ற ஒரு தூதனை வசந்தசேனை அவன் பட்ட பத்துப் பொன் கடனுக்காகத் தன் நகையைக் கழற்றிக்கொடுத்து விடுவித்தாள் என்றும், அன்று முதல் அவன் பௌத்த சன்னியாசியாகப் போய்விட்டானென்றும் சொல்லியிருக்கிறோமல்லவா. வசந்தசேனை வருமுன் அந்தத் தோட்டத்திற்கு வந்து சகாரன் கையிற் சிக்கிக்கொண்டு அவதிப்பட்டவன் அந்தச் சன்னியாசியே. பிறகு அடுத்த தோட்டத்திற் போய் ஸ்நானம் செய்துவிட்டு எங்கேயாவது சருகுகள் குவிந்திருந்தாலங்கு தன் காஷாய வஸ்திரத்தைக் காயப் போடுவோம் என்று சகாரன் முதலானவர்கள் போய் விட்டபடியால் மறுபடி யங்கு வந்தான். அவ்விடம் குளக்கரை யருகாமையில் குவிக்கப்பட்டிருந்த சருகில் தன் வஸ்திரத்தைப் பிரித்துப்போட்டான். அதே சருகின் கீழ்தான் வசந்தசேனையும் குற்றுயிராய் கிடந்தாள். ஈரவேஷ்டி தன்பேரில் போட்டிருந்த சருகின்மேல் விழவே அந்த ஈரம் அவள் பேரிலும் கொஞ்சம் பட்டு உணர்ச்சியை உண்டாக்கிற்று. சகாரன் என்னதான் மென்னியைப் பிடித்தும் இவள் சாருதத்தன்பேரில் வைத்திருந்த வாஞ்சையால் முற்றிலும் சாகவில்லை. ஈர உணர்ச்சி தேகத்தில் பட்டவுடனே அவள் தனது கையைத் தூக்கினாள். குளக்கரையில் உட்கார்ந்திருந்த சன்னியாசியும் பெண்பால் கையொன்று கிளம்பக்கண்டு வியப்புற்று அருகாமையில் வந்து பார்க்க முன்னம் தனக்கு உபகாரஞ் செய்த வசந்தசேனையா யிருக்கக்கண்டு கண்ணீர் வடித்துத் தங்களுக்கு ஏன் இப்படிப்பட்ட கதி வந்ததென்று கேட்க அதற்கு அவள் பதில் சொல்ல நாவெழாமல்

